Phone: No. 2241

Regd. No. M. 5934

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர். ப. ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 : : விலை அணா 1 [இதழ் 262

சென்னை 11-5-58 விளம்பி, சித்திரை-28 ஞாயிறு (வெளியூர் 12-5-58 விளம்பி, சித்திரை-29 திங்கள்)

### மாணவர்களின் அமெரிக்க-எதிர்ப்பு ஆர்ப்பாட்டம்

குவிட்டோ, மே 10—கடந்த வியாழனன்று தென் அமெரிக்க நாடுகளில் ஒன்றாகிய பெரு நாட்டின் தலைநகருக்கு அமெரிக்க உப-ஜனாதிபதி நிக்ஸன் வந்தபோது, மாணவர்கள் அவரை நோக்கிக் கல்லெறிந்து ஆர்ப்பாட்டம் செய்தனர்.

### பரம்பிக்குளம் தண்ணீர் பற்றிப் பேச்சு

திருவனந்தபுரம், மே 10—பரம்பிக்குளம் தண்ணீர் சம்பந்தமாக கேரள-சென்னை ராஜ்ய மந்திரிகள் ஜூன் 2ந் தேதி சந்தித்துப் பேச்சு வார்த்தை நடத்துவார்கள் என்று கேரள மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர் கூறினார்.

# காங்கிரஸ் கட்சியில் அதிகார தர்பார்

## வகுப்புவாதம் பதவிபித்து மலிந்து விட்டதே-நேருவின் மனவேதனை

### லட்சியத்தை நிறைவேற்ற முடியவில்லை என்றால் காங்கிரஸை கலைத்துவிடுக —தேபர்

புதுடெல்லி, மே 11—

காங்கிரஸின் இன்றைய போக்கு குறித்து நேற்று நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பிரதமர் நேருவும், காங்கிரஸ் தலைவர் தேபரும் வன்மையாகக் கண்டித்துப் பேசினர்.

தேபர் பேசுகையில், காங்கிரஸ் தான் பிரகடனம் செய்த லட்சியங்களை நிறைவேற்ற முடியவில்லை என்றால், அந்த ஸ்தாபனத்தை கலைத்துவிடுவதுதான் தேசத்திற்கு செய்யும் உத்தமமான தொண்டாகும். பதவியிலிருந்து தற்காலிகமாக விலகி இருக்கவேண்டும் என்று நேருஜி யோசித்ததற்கு காங்கிரஸ் அமைப்பில் புகுந்துவிட்ட சில குறைபாடுகள்தான் காரணம். காங்கிரஸ் அமைப்பில் இன்று பெருகிவரும் இக் குறைகளை நம்மால் தடுத்து நிறுத்த முடியாவிட்டாலும், நாட்டு முன்னேற்றத்திற்கு நாம் வகுத்துக்கொண்ட லட்சியப் பாதையில் இந்தத் தீய சக்திகள் குறுக்கிடாமலாவது பார்த்துக் கொள்ளவேண்டும் என்றார்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பிரதமர் நேரு பேசுகையில் காங்கிரஸில் ஜாதி வெறி, வகுப்பு வெறி, பதவி மோகம் முதலியன மலிந்துவிட்டன. இவற்றை கட்சியிலிருந்து ஒழித்துக்கட்டி நாட்டு மக்களுக்கு நல்லது செய்யத் தவறினால், காங்கிரஸ் ஸ்தாபனத்தின் எதிர்காலம் பேராபத்தாகிவிடும் என்று கடுமையாக எச்சரித்தார்.

#### சோஷலிஸத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள்

நேரு மேலும் பேசுகையில், நிலச்சீர்திருத்தம் போன்றவற்றை அமுல் நடத்துவதில் சில ராஜ்யங்கள் அசிரத்தைக் காட்டுகின்றன; பல ராஜ்ய முதல் மந்திரிகள் தாங்கள் வைத்ததே சட்டமாக நடந்து கொள்கிறார்கள்; தகுதியற்றவர்களைச் சட்ட சபைகளுக்குள் புகவிட்டதால் விபரீத விளைவுகள் ஏற்பட்டுள்ளன; காங்கிரஸில் இன்று கொள்கைப் பிடிப்பில்லாதவர்கள் ஏராளமான பேர் இருக்கின்றனர். இவர்களை வைத்துக் கொண்டு சோஷலிஸ சமுதாயத்தை உருவாக்க இயலவில்லை என்று மனவேதனையோடு கூறினார்.

## காங்கிரஸ்வாதிகளிடையே சோஷலிஸ உணர்வு இல்லை

### தீமைகளுக்கெல்லாம் இதுவே மூலகாரணம்

#### தீவிர கோஷ்டியின் தீர்மானம்

புதுடெல்லி, மே 10—

சோஷலிஸக் கருத்துக்களில் காங்கிரஸ்காரர்களுக்கு போதம் இல்லை; சோஷலிஸ எண்ணங்களை அவர்கள் உண்மையாக உணராமலிருக்கிறார்கள்; இவையே இன்று காங்கிரஸில் தோன்றியுள்ள சங்கடங்களுக்கெல்லாம் அடிப்படையான காரணம்.

இவ்விதம் காங்கிரஸில் தீவிரவாதிகள் என்று கருதப்படும் கோஷ்டியைச் சேர்ந்த சுசேதா கிருபளானி, மகாவீர்தியாகி, எஸ். என். மிஸ்ரா, ஓஸாரிகா ஆகியோர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் விவாதத்திற்கு ஒரு தீர்மானம் அனுப்பியிருக்கின்றனர். இந்த நிலைமையை சீர்திருத்த காங்கிரஸ் தலைவர் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும் என்றும் இத் தீர்மானத்தில் கோரப்பட்டுள்ளது.

## ஒரிஸாவில் காங்கிரஸல்லாதார் மந்திரிசபை நிறுவ முயற்சி

### பரிஷத்—பி.சோ. ஏழம்சத் திட்டம்

#### கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவு தரும் மந்திரி சபையில் சேராது

பூரி, மே 10—

ஒரிஸாவில் காங்கிரஸ் மந்திரி சபை ராஜினாமாவை தொடர்ந்து கணதந்திர பரிஷத் தலைவர் ஆர். என். சிங் தியோ காங்கிரஸல்லாத மந்திரிசபை நிறுவ முன்வந்திருக்கிறார்.

இது சம்பந்தமாக பரிஷத்தும் பி. சோ. கட்சியும் ஓர் உடன்பாட்டுக்கு வந்துள்ளனர். இதனடிப்படையில் ஒரு ஏழம்சத் திட்டத்தையும் முன் வைத்துள்ளனர்.

#### ஏழம்சத் திட்டம்

1. நில வினியோகம், நியாய வாரம், 15 ஏகர் அளவில் நிலவுடமைக்கு வரம்பு, இந்த நோக்கத்துடன் நிலச்சீர்திருத்தங்கள் (2) நிர்வாக அதிகாரங்களை விரிவுபடுத்தி கிராமப் பஞ்சாயத்துகளை ஜனநாயகபூர்வமாக இயங்கச்செய்தல் (3) எளிய முறையில் நிர்வாகம், செலவில் சிக்கனம், நீதி நிர்வாகப் பிரிவினை, ஊழல் எதிர்ப்புக் கமிஷன் நிறுவுதல் (4) மந்திரிகள் சம்பளத்தை ரூ 500 ஆகக் குறைத்துக் கொள்வது (5) வரிக் கட்டுக்கோப்புகளை திருத்தி ஏழை நடுத்தர மக்கள்மீது பளு விழாமல் செய்வது (6) ஆதிவாசிகள், ஹரிஜன் மக்களுக்கு பொருளாதார, கலாசார உயர்வுக்காக விசேஷ அக்கறை (7) மதுவிலக்குக் கொள்கையைப் படிப்படி அமுல்நடத்தல் என்ற ஏழம்சங்கள் இதில் உள்ளன.

#### கம்யூனிஸ்ட் ஆதரவு

புதுடெல்லியில்கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக்கமிட்டி பரிஷத்-பி.சோ. கூட்டு மந்திரிசபைக்கு ஆதரவுதர முடிவுசெய்துள்ளது. தனது கொள்கைகள் கோட்பாடுகளின் பிரகாரம் கணதந்திர பரிஷத் போன்ற ஒரு ஸ்தாபனத்துடன் கூட்டாக ஆட்சி அமைப்பது சாத்தியமில்லை என்றும் திட்டவட்டமாகக் கூறியுள்ளது.

பரிஷத்தும் பி.சோ.வும் கூட்டாக வெளியிட்டுள்ள பொதுத் திட்டத்தில் மக்களுக்கு அவசியமான சில திட்டங்கள் உள்ளன. மக்கள் நீண்ட காலமாகப் போராடி வந்துள்ள பல திட்டங்கள் சேர்க்கப்பட வேண்டும் என்று இத் தீர்மானம் கூறுகிறது.

தமது சுதந்திரமான ஸ்தானத்தை நிலைநாட்டிக் கொண்டே, இந்த பரிஷத்—பி. சோ. மந்திரி சபை காங்கிரஸ் போக்கில் செல்லாமல் அதன் திட்டங்களை நிறைவேற்றும்படி கம்யூனிஸ்ட் கட்சி வலியுறுத்தும்.

இதைச் சாதிக்கவேண்டுமானால் மக்கள் விழிப்புணர்ச்சியுடன்

(3-ம் பக்கம் பார்க்க)

## மந்திரிசபை சரியாகப் பணி ஆற்ற 5 வருடம் பதவியிலிருக்க வேண்டும்

### தேவிகுளம் தேர்தல் பற்றி தேசீயத் தோட்டத் தொழிலாளர் தலைவர் எல். வாசுதேவ் வேண்டுகோள்

[ டிரங்க்போன் மூலம் ]

கம்பம், மே 11—

பீர்மேடு தேசீயத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் தலைவர்களிலொருவராகிய திரு. எல். வாசுதேவ் 7-5-58 அன்று தோட்டத் தொழிலாளர்களுக்கு விடுத்துள்ள ஒரு அறிக்கையில், 'எந்தக் கட்சி ஆட்சிபுரிந்தாலும் ஐந்து வருடம் ஆட்சி புரிந்தால்தான் அவர்களின் நன்மை தீமைகளை ஜனங்கள் புரிந்துகொள்ள முடியும். ஒரு வருட காலத்தில் புரிந்துகொள்ள முடியாது,'' என்று கூறுகிறார்.

மேலும்,

ஒரு வருட காலத்தில் ஆட்சிக்குப் போய் நிர்வாகப் பொறுப்பை அறிந்து கொள்ளப் போதுமான காலமும், அவகாசமும் கிடையாது.

5 ஆண்டுகள் ஆட்சி புரிந்தால் தான் அதன் முழு சக்தியையும் பயன் படுத்த முடியும்.

கங்காணிமார்களை ஒழித்துக் கட்ட ஏற்பாடு செய்த தொழிற் சங்கப் பிரதிநிதிகளைத் தொழிலாளர்களே புரிந்து கொள்ளலாம். தொழிலாளர் வர்க்கம் சூழ்ச்சிக்காரரின் வலையில் சிக்காமல் உண்மையை உணர்ந்து செயல்பட வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன், என்றும் கூறியுள்ளார்.

தவிர, தோட்டத் தொழிலாளர்கள் நிலைமையைப் பரிசீலனை செய்து சம்பளம், போனஸ் விஷயமாக தீர்ப்புக் காண்பதற்காக ஏற்படுத்தப்பட்ட தொழிற் கோர்ட்டு 1953-ம் ஆண்டில் கலைக்கப்பட்டு விட்டது பிறகு இப்பொழுது கடந்த ஆண்டில்தான் சர்க்காரால் அந்த விசாரணைக் கமிட்டி மீண்டும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தக்கமிட்டி சீக்கிரம் ஒரு முடிவு செய்ய சர்க்காரை துரிதப்படுத்த வேண்டியது தொழிலாளர் கடமையாகும்.

ஆகவே தொழிலாளர்கள் உண்மையை அறிந்து செயல்படுவது அவர்களின் கடமையாகும் என்றும் கூறியுள்ளார்.

வரப்போகும் தேவிகுளம் உபதேர்தல் விஷயமாக என்னிடம் தொழிலாளர்கள் அபிப்பிராயம் கேட்கிறபடியால், தோட்டத் தொழிலாளர் சங்கப் பிரதிநிதியென்ற முறையில், "உள்ளதை உள்ளபடி தெரிவித்துத் தொழிலாளர்களுக்கு மேற்கண்ட வேண்டுகோளை நான் விடுத்துள்ளேன்'' என்றும் அவர் அவ்வறிக்கையில் கூறியுள்ளார்.

## தொழிலில் ஒழுங்கு விதிகள் பற்றி

### கே. டி. கே. கேள்வி

புதுடில்லி. மே 7—

தொழிலில் ஒழுங்கு விதிகள் பற்றி 1958 மார்ச் 14, 15-ம் தேதிகளில் தொழில் மாநாட்டு உபகமிட்டி ஒரு திட்டத்தை ஊர்ஜிதம் செய்தது. இதற்குப் பிறகு அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸும், ஹிந்த் மஸ்தூர் சபையும் சில விளக்கங்கள் கோரியுள்ளன என்று உதவி தொழில் மந்திரி அபித் அலி, கே. டி. கே. கேட்ட கேள்விக்கு பதிலளித்தார்.

## கேரளத்திற்கு அடுத்து வங்கத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சி வரலாம்

### பிரதமர் நேரு லண்டன் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் கூறுகிறார்

லண்டன், மே 10—

"டெயிலி டெலகிராப்'' என்ற ஒரு பிரிட்டிஷ் பத்திரிகையின் டெல்லி நிருபருக்கு அளித்த பேட்டியில் இந்திய நாட்டில் கம்யூனிஸம் வளர்ந்து விடுமென்ற பயமில்லை, என்றாலும் கம்யூனிஸம் பலமடைவதைவிட காங்கிரஸ் பலஹீனமடையும் ஆபத்துள்ளது என்றார்.

இன்னும் 20 ஆண்டுகளில் என்ன நடக்கும் என்பதைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. சமீப எதிர்காலத்தைப் பொறுத்தவரையில் கம்யூனிஸ்டுகள் கேரளத்தில் ஆட்சி நீடிக்கச் செய்தால் அதிர்ஷ்டசாலிகளாக இருப்பர் என்றும், அடுத்தது மேற்கு வங்கத்தில் குறிப்பாகக் கல்கத்தாவில் உடனடி அபாயம் (அதாவது கம்யூனிஸ்டுக் கட்சி அதிகாரத்திற்கு வரும் அபாயம்) இருக்கிறதென்றும் கூறினார்.

கம்யூனிஸ்டுகளின் நோக்கத்தைப் பொறுத்தவரையில் தனக்கு எதிர்ப்பு இல்லை என்றும் ஆனால் அவர்கள் பலாத்கார வழியில் செல்வதையே எதிர்ப்பதாகவும் கூறினார்.

காங்கிரஸிற்கு ஏற்பட்டுள்ள விபத்துபற்றிக் குறிப்பிடுகையில், நீண்டநாள் அதிகாரத்தில் இருந்ததால்தான் இந்த நிலைமை என்றார். பல ராஜ்யங்களில் காங்கிரஸ் தோற்கடிக்கப்படும் என்பது அல்ல அபாயம், மாறாக பல ராஜ்யங்களில் மற்ற கோஷ்டிகளுடன் சமரசம்செய்தே மெஜாரிடி ஸ்தானத்தை அடைய வேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளதே பெரும் அபாயம் என்றார்.

# மக்கள் மன்றம்

## மாத்தனின் மானம் போச்சு

கேரள மந்திரிகள் தேவிகுளம் உபதேர்தலில் பிரசாரம் செய்ய வராமல் ஜனநாயகப் பண்பாட்டை ஏற்படுத்தினர். இதனுல் ஆத்திரமுற்ற கேரள ராஜ்ய காங்கிரஸ் கமிட்டி செயலாளர் ஜோஸப் மாத்தன் வாய்க்குவந்தபடி விமர்சனம் செய்திருக்கிருர். ஓராண்டு துர்-ஆட்சி நடத்தியதால் தாம் வந்தால் ஓட்டுக் கிடைக்காது என்று பயந்தே மந்திரிகள் வரவில்லை என்று அவர் ஒரு சரடு திரித்தார். அவர்கள் கொண்டுவந்த நல்வழக்கு காங்கிரசிற்கு பாதகமாகாது என்ருர். ஆனுல் பாவம் அவர் இவ்வாறு திருவாய் மலர்ந்து கொண்டிருக்கும்போதே மந்திய மந்திரிகள் பட்டீல், தாமஸ் இருவரும் வரவில்லை என்ற தகவல்வந்துள்ளது. கக்கன்மட்டும் உளறிக் கொட்டிக் கிளறி மூடிவிட்டுத் திரும்பியுள்ளார். பாவம் மாத்தான் மானம் காற்றில் பறக்கிறது.

ராஜன்,
திருவனந்தபுரம்.

## விவசாயியின் துயரம்

ஓமலூர் தாலூகா அரூர் பட்டி கிராமம் பெரியாண்டி ஊரிலிருக்கும் ஏழை விவசாயியான நான் 46 சென்ட் தரிசு நிலத்தில் பயிர் செய்து வந்தேன் சொந்த உழைப்பால் நிலத்தைத் திருத்திக் கிணறு வெட்டியுள்ளேன். 9 வருடமாக எனக்குத் தண்டத் தீர்வை விதித்திருக்கிருர்கள் இவ்வருடம் வேளாண்மை செய்ய வகையில்லாதிருக்க ரூ 59-8-0 தண்டத் தீர்வை விதித்திருக்கிருர்கள். இந்தச் சமயத்தில் கிராம அதிகாரிகள் வந்து தட்டுமுட்டுச் சாமான்களுடன் வீட்டுக் கூரையைக்கூடப் பிய்த்துக் கொண்டு போய்விட்டார்கள். சோற்றுக்கும் வழியின்றி குடியிருக்க நிழலின்றித் தவிக்கிறோம். சர்க்கார் நியாயம் செய்யுமா?

ராமசாமி
அரூர்.

## ரிபேட் நீடிக்க வேண்டும்

கைத்தறித் துணி தேங்கிப் போய் விற்க முடியாமல் கிடந்தது. நெசவாளர் கண்ணீர் வடித்தார்கள். இந்த சமயத்தில் நீண்ட நாள் கிளர்ச்சிக்குப் பிறகு ரூபாய்க்கு 2 அணு ரிபேட் கொடுக்கப்பட்டது. ஆனுல் இந்த ரிபேட் சலுகை மீண்டும் பறிக்கப்படுகிறது. இதன் விளைவாக தற்காலிமாகக் கிடைத்த ஒரு வாய்ப்பும் தொலைந்து போய் நெசவாளர் திண்டாட நேரும்.

நெசவாளி,
காஞ்சிபுரம்.

## அனுதாபம்

தென்கலம் (தாழையூத்து) மே 10—

2-5-58-ல் நடைபெற்ற தென்கலம் வட்டாரம் முற்போக்கு வாலிபர் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில், பாம்பு கடியால் மரண மடைந்த தென்கலம் பஞ்சாயத்து போர்டு உப தலைவர் திரு சுப்பையா மறைவுக்கு வருத்தம் தெரிவித்தும், அன்னுர் குடும்பத்திற்கு அனுதாபம் தெரிவித்தும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தென்கலம் கம்யூனிஸ்ட் கட்சி சார்பிலும் இத்தகைய தொரு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## மேட்டூர் மில் தொழிலாளர் கூட்டுறவு ஸ்டோர்

### கட்டிட அஸ்திவாரக் கல்நாட்டு விழா

மேட்டூர் அணை, மே 6—

நேற்று காலை 9 மணிக்கு சேலம் கேம்பில், மேட்டூர் மில் தொழிலாளர் கூட்டுறவு பண்டகசாலையின் கட்டிடத்திற்கு அஸ்திவாரக்கல் நாட்டப்பட்டது. சேலம் கோ-ஆபரேடிவ் சென்ட்ரல் பாங்க் தலைவர் திரு. கே. எல். சுப்ரமண்யம் எம். எல். ஏ., அஸ்திவாரக்கல் நாட்டுவித்தார்.

கூட்டத் தலைவர் திரு. டி. பி. ஜமேஷா முன்னுரைக்குப் பின், திரு. கே. எல். சுப்ரமண்யம், சேலம்கோ-ஆபரேடிவ்சென்ட்ரல் பாங்கியிலிருந்து, கூட்டுறவுப்பண்டகசாலைக்கு ரூ 65,000 கொடுத்திருப்பதைப்பற்றியும், பண்டகசாலையின் வளர்ச்சியைப்பற்றியும் பேசினுர்.

## நாகை ஸ்டீல் ரோலிங் மில் தொழிற்சங்க 6-வது மகாநாடு

### மணலி கந்தசாமி தலைமை உரை

நாகப்பட்டினம், மே 7—

நாகை ஸ்டீல் ரோலிங் மில் தொழிலாளர் சங்க 6-வது மகாநாடு தோழர் மணலி கந்தசாமி தலைமையில் 3-5-58 அன்று நாகை ஸ்டார் டாக்கீஸில் நடைபெற்றது.

**மணலி கந்தசாமி**

சங்கத் தலைவர் தோழர் ஆர். கர்ணுஜி ராவ் வரவேற்புரை நிகழ்த்தியபின், தோழர் மணலி கந்தசாமி தன்னுடைய தலைமையுரையில், இந்திய சர்க்காரின் தொழில் கொள்கை பற்றியும், 2-வது ஐந்தாண்டு திட்டம் வெற்றிகரமாக நிறைவேற்றுவதற்குத் தொழிலாளர்களின் பங்கு என்ன என்பதை விளக்கியும், தமிழ் நாட்டில் உள்ள ஒரே இரும்புத் தொழிற்சாலையாகிய நாகை ஸ்டீல் ரோலிங் மில்லைத் திறம்பட நடத்தவும், அபிவிருத்தி செய்யவும் மேனேஜ்மெண்டாரையும், சர்க்காரை வலியுறுத்தவும், அதே சமயத்தில் தொழிலாளர்கள் தங்கள் வாழ்க்கை வசதிகளைப் பாதுகாத்துக் கொள்ள நியாய பூர்வமாகத் தாங்கள் வைத்துள்ள கோரிக்கைகளை அடையவும், ஒற்றுமை மிக்க ஸ்தாபனத்தைக் கட்டிக் காக்கவேண்டியது அவசியம் என்பதை விளக்கிக் கூறினுர்.

**டி. ஆர். கணேசன்**

அடுத்து கொடியேற்றி வைத்துப் பேசிய தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் காரியதரிசி தோழர் டி. ஆர். கணேசன், சர்வதேசீய ரீதியிலும், தேசீய ரீதியிலும் தொழிலாளி வர்க்கம் அடைந்துள்ள முன்னேற்றங்களை எடுத்துக் கூறினுர். தொழிலாளிகள் மேலும் ஒன்றுபட்டு சகல பகுதி மக்களின் நல்வாழ்வுக்குப் போராடும் வர்க்கமாக முன்னணியில் நின்று போராட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

தீர்மானங்களையும், கோரிக்கைகளையும் விளக்கி தோழர் எம். காத்தமுத்து பேசினுர்.

**தீர்மானங்கள்**

அணுகுண்டு, ஹைகுண்டு சோதனைகளை முதலில் நிறுத்திய சோவியத் யூனியனைப் பாராட்டியும்,

இந்தியத் தொழிலாளர்களின் 14 அம்சக் கோரிக்கைகளை சர்க்கார் நிறைவேற்ற வேண்டுமென்று கோரியும்,

தொழிலாளர் நலவுரிமைகளுக்கு விரோதமான முறையில் உயர் நீதி மன்றங்கள் தீர்ப்புகள் கொடுப்பதைத் தடுக்கும் முறையில் இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்றும்,

என். ஜி. ஓ வினர் கிளர்ச்சியை ஆதரித்தும்,

அரசியல் கைதிகள் விடுதலை கோரியும்,

நாகை நகரக் குடிதண்ணீர் சப்ளைத் திட்டத்திற்கு சர்க்கார் மான்யத் தொகை கொடுத்து உதவக் கோரியும், பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**புதிய நிர்வாகிகள்**

புது வருடத்திற்கு சங்கத்திற்கு தோழர் ஆர். கர்ணுஜி ராவ் தலைவராகவும், தோழர்கள் எம் முத்துசாமி, எம். தங்கவேலு உபதலைவர்களாகவும், தோழர் வி. பி. ராமையா காரியதரிசியாகவும், ஆர். பெருமாள் உபகாரியதரிசியாகவும், திரு முத்தையா செட்டியார் பொக்கிஷதாராகவும், 10 பேர்கள் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

**பொதுக்கூட்டம்**

மாலை 6 மணிக்கு அவுரித்திடலில், மகாநாட்டையொட்டி, ஆர். கர்ணுஜிராவ் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர்கள் என். சிவராஜ், எம். சந்திரன், வி. சாமிநாதன், எம். காத்தமுத்து, மணலி கந்தசாமி ஆகியோர் பேசினர்.

## பேரூர் பஞ்சாயத்து தேர்தலில் கம்யூனிஸ்ட் வெற்றி

கோவை, மே 9—

கோவையை அடுத்த பேரூரில் மே 8ம் தேதி பஞ்சாயத்துபோர்டு தேர்தல் நடைபெற்றது. இத்தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி அமோக வெற்றி பெற்று பெரும்பான்மையான இடங்களைப் பிடித்தது. விவரம் வருமாறு :—

| | |
|---|---|
| மொத்த ஸ்தானங்கள் | 15 |
| கம்யூனிஸ்ட் | 8 |
| நம் ஆதரவு பெற்ற சுயேட்சை | 1 |
| காங்கிரஸ் | 6 |

இத்தேர்தலில் காங்கிரஸ்காரர்களின் பல தில்லுமுல்லுப் பிரச்சாரங்களை எதிர்த்து கம்யூனிஸ்ட் தோழர்கள் நன்கு வேலை செய்தது குறிப்பிடத் தக்கது.

# எங்கும் செங்கொடி மயம்

## தமிழகமெங்கும் மேதின விழா

சென்னை, மே 10—

**கோவை**

கோவை: கிழக்கு ரூரல் பிரதேசத்தில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மேதின விழா சிறப்பாக நடைபெற்றது.

சிங்கா நல்லூர் கட்சி ஆபீஸ் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. ஆபீஸ் முன் கொடியேற்று விழா நடைபெற்றது. கொடியேற்று விழாவை யூனிட் காரியதரிசி தே. பழனிசாமி நடத்தி வைத்தார். மேதினம் பற்றி எஸ். என். காளியண்ணன் சொற்பொழிவாற்றினுர்.

நீலிக்கோணம்பாளையத்தில்: கட்சி கிளை ஆபீஸ் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. செங்கொடியை வாத்திய இசை முழங்க என். கே. முத்து ஏற்றுவித்து, மேதினம் பற்றி பேசினுர்.

ஒண்டிப்புதூர்: காமாட்சிபுரத்தில் கட்சிக் கிளை ஆபீஸ் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. தாரை தப்பட்டை முழங்க செங்கொடி ஏற்றுவிழாவை டி. ஆறுமுகம் நடத்திவைத்தார். மே தினம் பற்றி சொற்பொழிவாற்றினுர்.

சவுரிபாளையம்: கட்சி கிளையிலிருந்து ஊர்வலம் மேதினம் வாழ்க என்ற பேனருடன் கொடிகளுடன் புறப்பட்டு உடையார்பாளையம் சென்று செங்கொடி ஏற்றுவிழாவை எஸ். என். காளியண்ணன் நடத்திவைத்தார். மே தினம் பற்றி பேசினுர். இனிப்பு வழங்கினர்.

ஊர்வலம் திரும்பவும் நேராக மசக்காளிபாளையம் சென்று மைதானத்தில் செங்கொடி ஏற்றுவிழாவை எஸ். என். காளியண்ணன் நடத்திவைத்தார். மேதினம் பற்றி பேசினுர்.

ஊர்வலம் திரும்பவும் சவரிபாளையம் வந்து செங்கொடியேற்று விழா நடைபெற்றது. செங்கொடியேற்று விழாவை எஸ். நாராயணசாமி நடத்திவைத்து, மே தினம் பற்றி பேசினுர். முடிவில் அனைவருக்கும் சுண்டல் வழங்கினர்.

மசக்காளி பாளையத்திலிருந்து ஊர்வலம் வந்தபோதே இடையில் பாரதிபுரம் மட்டைசாலைப் பக்கம் கொடியேற்று விழாவை என்.கே. முத்து நடத்திவைத்தார். மே தினம் பற்றி பேசினுர். அனைவருக்கும் வெள்ளரிக் காய் வழங்கினர்.

உப்பிலிபாளையத்தில்: மைதானத்தில் செங்கொடியேற்று விழாவை ஜி கஸ்தூரிசாமி நடத்திவைத்து, மே தினம் பற்றி பேசினுர்.

கள்ளிமடையில்: ஸ்தல தோழர்களே கொடியேற்று விழாவை நடத்தினர்.

பீளமேடு: பகுதியில் மே தினம் சிறப்பாக கொண்டாடப்பட்டது. கொடியேற்று விழா நடைபெற்றது.

**சிங்காநல்லூர்**

கோவைக்கு அடுத்த சிங்காநல்லூர் பிரதேசத்தில் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் சிங்கா நல்லூர் கிளை மே தின விழாவை சிறப்பாகக் கொண்டாடியது

கிளை ஆபீஸ் பச்சை மட்டை, தோரணங்கள், வர்ண காகித பூக்களால் அலங்கரிக்கப்பட்டது. திருச்சி ரோடில் தோரணங்கள் கட்டப்பட்டும் உலக தொழிலாளர்களே ஒன்று சேருங்கள், கன்னித் தமிழ் வாழ்க, கம்பன் வாழ்க, கோ. ஜி மி.தொ. சங்கம் வாழ்க, தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரஸ் வாழ்க, அ. இ. தொ. சங்க காங்கிரஸ் வாழ்க, உலக சமாதானம் வாழ்க, மே தினம் வாழ்க, பாட்டாளி மக்களின் விடுதலை தினம் மே தினம், உலகத் தொழிலாள வர்க்கத்தின் ஒற்றுமை தினம் மே தினம், சங்கத் தமிழ் வாழ்க, பைந்தமிழ் வாழ்க, இரு வேறு உலகத்தியற்கை திருவேறு தெள்ளிய ராதலின் வேறு 'தமிழ் மறை'—இவை போன்ற கோஷங்கள் பாவட்டாக்களிலும், தட்டிகளிலும் எழுதப்பட்டு ரோடில் கட்டப்பட்டு செங்கொடிகளால் அலங்கரிக்கப்பட்டன.

1—5—58 காலை 8 மணிக்கு சிங்காநல்லூர் கரும்புக் கடை மைதானத்தில் கொடி மரம் போடப்பட்டு செங்கொடியை டி. ஆறுமுகம் ஏற்றிவைத்தார். மே தினம் பற்றி சொற்பொழிவாற்றினுர்.

வசந்தா மில் எதிர்புறம் செங்கொடியை மேற்படி மில் தொழிலாளி முருக நாயக்கர் ஏற்றுவித்தார். டி ஆறுமுகம் மே தினம் பற்றி பேசினுர்.

தாரை தப்பட்டை முழங்க கதிரி மில் எதிர்புறம் கொடியேற்று விழாவும், ஒண்டிப்புதூரில் கொடியேற்று விழாவும் ஊர்வலமாக வந்து நடத்தினர். கொடியேற்று விழா நிகழ்ச்சியை டி. ஆறுமுகம் நடத்தி வைத்தார். மே தினம் பற்றிப் பேசினுர்.

மாலை 3 மணிக்கு சிங்காநல்லூர் கிளை சங்க ஆபீஸிலிருந்து 100 தொண்டர்கள் காக்கி ஆப் ட்ரவுஸர், வெள்ளை அரைகை ஆபாரம், கழுத்தில் சிவப்பு கர்சிப் அணிந்து முன்செல்ல ஊர்வலம் நடைபெற்றது. ஊர்வலத்தில் கோ.ஜி மி. தொ. சங்கம் என்று பொறிக்கப்பட்ட பேனர் மட்டும் எடுத்துச் செல்லப்பட்டது.

உலக தொழிலாளர்களே'ஒன்று சேருங்கள், மே தினம் வாழ்க, தொழிலாளவர்க்க ஒற்றுமை ஓங்குக, தொழிற்சங்கங்களை அங்கீகாரம் செய், கோரிக்கை சாசனத்தை அமுல் நடத்து, 25 சத சம்பள உயர்வு உடனேவேண்டும், பஞ்சப்படியை சம்பளத்துடன் சேர்த்துக் கொடுஎன்ற கோஷங்கள் கோஷிக்கப்பட்டு ஊர்வலம் திருச்சி ரோடு வழியாக நேராக கோவை டவுனுக்கு சென்று டவுன் ஹால் மைதானத்தை அடைந்தது.

மாலை 6 மணிக்கு மிகப் பெரிய ஊர்வலம் பாண்டு வாத்தியம்முன் செல்ல இதர வாத்தியங்கள் இடைஇடையே வர, 21 சங்கங்கள் சார்பில் ஊர்வலம் டவுன் முக்கிய வீதிகள் சுற்றி சிதம்பரம் பூங்காவை அடைந்தது. பொதுக்கூட்டத்தில் சங்கங்களின் பிரதிநிதிகள் பேசினர்.

இம் மேதினம் சரித்திரப்பிரசித்திப்பெற்ற மேதினமாக 21 தொ. சங்கங்கள் ஒன்றுபட்டு கொண்டாடியது குறிப்பிடத் தக்கதாகும்.

**சிவகங்கை தாலூகா**

இவ்வாண்டு மே தின விழா சிவகங்கை தாலுக்காவில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. மே முதல் நாள் அதிகாலையிலிருந்தே செங்கொடித் தோரணங்களும் கொடிகளும் நகரெங்கும் கட்டப்பட்டு செம்மயமாகக் காட்சியளித்தன. எட்டு இடங்களில் செங்கொடிகள் ஏற்றுவிக்கப்பட்டன.

கீழப்பசளையிலே: மே முதல் தேதி அருணேதயத்திலே நான்கு இடங்களில் செங்கொடிகள் ஏற்றப்பட்டன. மானுமதுரையிலே போட்டா போட்டியுடன் நகரெங்கும் செங்கொடி அலங்காரம் செய்யப்பட்டது. இரவில் பொதுக்கூட்டம். மே தினப் போட்டிகளுக்குப் பரிசுகளும் வழங்கப்பட்டன.

வெள்ளக்குடி, பெருவேலங்குடி கிராமங்களிலும் செங்கொடி ஏற்றப்பட்டன.

பனிக்கனேந்தல் கிராமத்தில் மே முதல் தேதி காலையில் விளையாட்டுப் போட்டியுடன் விவசாயிகள் சங்கத்தில் செங்கொடி ஏற்றிவைக்கப்பட்டன.

மே 2-ந் தேதி சாத்தனூரிலே விவசாயிகள் செங்கொடி ஏற்றிவைக்கப்பட்டு, தோழர் ஆதிமூலம்பேசினுர். குமாரப்பட்டியில் மே 5-ல் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் ஆதிமூலம் பேசினுர்.

புதுமடத்தில்: மே 5-ல் தோழர் அப்துல்காதர் தலைமையில் மே தினக் கூட்டம் நடந்தது. செங்கொடி ஏற்றிவைத்து, தோழர் வி. எம் ஆறுமுகம் இங்குள்ள மீன்பிடி தொழிலாளர்கள், வெற்றிலை கொடிக்காலில் வேலை செய்யும் தொழிலாளர்கள், இலங்கையிலிருந்து நாடு கடத்தப்பட்டவர்கள் நிலைபற்றிப் பேசினுர். தோழர்கள் முகமது யூனுஸ், அப்துல் கரீம், வாசுதேவன் பேசினர். பதனீர், கருப்பட்டி உற்பத்தியாளர் மேல் கள் இறக்குவதாகக் கேஸ்கள் போட்டு தொந்தரவு செய்வதால் ஆயிரக்கணக்கானவர் தொழில் இழந்து வருவதை எடுத்துக் காட்டினர்.

**மேட்டுப்பாளையம்**

பல்வேறு தொழிற்சங்கங்களின் சார்பில் இந்த மேதினம் சிறப்பாகக் கொண்டாப்பட்டது. காலையில் 100 பேர்களின் சைக்கிள் ஊர்வலம் நடைபெற்றது.

மாலையில் பெரிய ஊர்வலத்திற்குப்பின் தோழர் விஸ்வநாதன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் பொன்னுமுத்து, வெள்ளியங்கிரி, டி. ரங்கசாமி, கருப்பண்ணன் ஆகியோர் மேதின வரலாறு, தொழிலாளர் கடமைபற்றிப் பேசினர்.

**தாசம்பாளையம்**

விவசாயிகள் சங்கத்தின் சார்பில் மே தினக்கூட்டம் தோழர் எம். செலுவப்பன் தலைமையில் நடைபெற்றது சுப்பையன், கே. வெள்ளிங்கிரி, எம். இ. மாஸ்தண்ணன், உன்னிபாலன், நஞ்சப்பன், ராமசாமி ஆகியோர் பேசினர்.

# கொத்தவாச்சேரியில் மிராசுதார் அடியாட்கள் அட்டூழியம்

## வீடுகள் நாசம், கடை சூறை, ஊழியர் கொலை செய்யப்பட்டார்

### பயங்கர அட்டகாசம் தலைவிரித்தாடுகிறது

கடலூர், மே. 7—

கொத்தவாச்சேரி கிராமத்தில் விவசாயத் தொழிலாளர்களை அடித்துக் கொன்றனர் மிராசுதார்கள். வீடுகளை நாசப்படுத்தி, சேரியிலுள்ள மளிகைக் கடையைச் சூறையாடி, கொடி மரத்தை வெட்டி பட்டப் பகலிலேயே அட்டகாசம் செய்தனர்.

3-5-'58 காலை 10 மணிக்கு கடலூருக்கு அடுத்த கொத்தவாச்சேரி கிராமத்தில் இந்த கொடுமையான நிகழ்ச்சி நடந்தது. சுமார் 200 அடி ஆட்களுடன் அவ்வூர் மிராசுதார்கள் சேரிக்குள் புகுந்து, விவசாயத் தொழிலாளர்களை கத்தி, சுளுக்கி இவைகளினால் தாக்கி, கல் வீடு ஓடுகளைப் பிய்த்தெடுத்து, பயந்து வீட்டில் பதுங்கியிருந்த ஆண், பெண்களை தாக்கிப் படுகாயப்படுத்தினர். இதனால் பதினைந்து பேருக்கு அதிகமாக, ஆண் பெண்கள் மண்டை, கைகால்கள் உடைந்து, வயிற்றில் குத்தப்பட்டு கடலூர் தலைமை ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டனர்.

### மாரிமுத்து இறந்தார்

கோரமாக தாக்கப்பட்ட மாரிமுத்து என்ற இளம் வாலிபர் ரத்தம் கக்கி 6-5-58 இரவு 12 மணிக்கு கடலூர் தலைமை ஆஸ்பத்திரியில் உயிர் துறந்தார். இந்த கோர சம்பவம் கேட்டு, கொத்தவாச்சேரி கிராம விவசாயத் தொழிலாளர்கள் ஆண், பெண்கள் சுமார் 200 பேர் இன்று கடலூருக்கு வந்து இறுதி மரியாதை செலுத்தினர். மாரிமுத்துவின் இளம் மனைவி 5 மாத கர்ப்பிணி.

### பூரண விசாரணை வேண்டும்

ஜில்லா சூப்பிரெண்டிற்கு இந்தக் கோர சம்பவத்தை இன்று காலை தெ. ஆ. ஜில்லா கட்சி காரியதரிசி தோழர் ஜெயராமனும், புருஷோத்தமனும் நேரில் தெரிவித்து இது பற்றி பரிபூரண விசாரணை செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினர்.

மேலும் மூவரின் நிலை கவலைக்கிடமாக இருக்கிறது. தலைமை ஆஸ்பத்திரியில் கிடக்கும் அவர்களின் நிலையைப்பற்றி தற்சமயம் ஏதும் சொல்வதற்கில்லை. இவ்வளவு கோரச் செயல்களுக்கும், கொலைகளுக்கும் காரணம் விவசாயத் தொழிலாளர்கள் தங்கள் நியாயமான உரிமைகளுக்காகக் கிளர்ச்சி செய்வதன்றி வேறொன்றும் இல்லை. இதுபோன்ற அக்ரமங்களை நிறுத்த சர்க்கார் உடனடி நடவடிக்கை எடுக்குமா? என்று எங்கும் கேட்கப்படுகிறது.

## அடையாள வேலை நிறுத்தம்

### திருச்சி என்.ஜி.ஓ. சங்கம் ஆதரவு

திருச்சி, மே 8—

தமிழ் நாடு என். ஜி. ஓ. யூனியன் திருச்சி மாவட்டப் பிரிவின் பொதுக் குழுக் கூட்டம் மே 5-ம் தேதி நடைபெற்றது. சங்கத் தலைவர் திரு. டி. அருணாசலம் தலைமை வகித்தார்.

கடலூர் திரு. இரங்கராமானுஜம், திரு. கல்யாணசுந்தரம் (டிப்டி தாசில்தார்) நா. பாலசுப்ரமணியம், பி. கிருஷ்ணமூர்த்தி, சரவணன், சக்திவேல், எம். எஸ். ராமசாமி ஆகியோர் மே. 15-ல் நடைபெறவிருக்கும் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தத்தை ஆதரித்துப் பேசினர்.

## தோழர் ஐசக்கை கம்யூனிஸ்ட் கைதிகளுடன் வை

தூத்துக்குடி, மே 5—

மதுரை சிறை அதிகாரிகள் தோழர் ஐசக்கை (நெல்லை ஜில்லா கமிட்டி உறுப்பினர். முத்தையாபுரம்-முள்ளக்காடு உப்பு உற்பத்தியாளர் சங்கக் காரியதரிசி) கம்யூனிஸ்ட் கைதிகளுடன் வைக்க முடியாதென்றும், தனியாகவே இருக்கவேண்டுமென்றும் கூறுகிறார்களாம். தோழர் ஐசக் கம்யூனிஸ்ட் தலைவர் என்பதை தமிழக மக்கள் நன்கு அறிவார்கள். அதுமட்டுமல்ல தூத்துக்குடி உதவி செஷன்ஸ் நீதிபதி தன் தீர்ப்பில் கம்யூனிஸ்ட் என குறிப்பிட்டிருந்தும் மதுரை சிறை அதிகாரிகள், ஏன் இப்படி சிறையில் கூட தோழர்களுடன் இருக்கக் கூடாது எனத் தடுக்கிறார்கள் எனத் தெரியவில்லை. இப் போக்கை அந்த அதிகாரிகள் கைவிட எல்லா பொதுஜன ஸ்தாபனங்களும் தீர்மானமியற்றி சர்க்காருக்கும், சென்னையிலுள்ள சிறை அதிகாரிக்கும் அனுப்பவேண்டுமென தோழர் எஸ். ஏ. முருகானந்தம் ஓர் அறிக்கை மூலம் வேண்டுகிறார்.

## பிரிட்டிஷ் பஞ்சாலைத் தொழிலில் நெருக்கடி

லண்டன். மே 7—

பிரிட்டனால் ஒரு நெருக்கடியைத் தவிர்க்க முடியுமா? என்ற கேள்விக் குறி பெரிதாக எழுந்துள்ளது. பிரிட்டனுக்குச் சோறு லங்கா ஷயர் சாறு என்று ஒரு பழமொழியுண்டு. இரண்டு லட்சத்து 75 ஆயிரம் பேர்களுக்குப் பஞ்சாலைத் தொழில் 1951-ல் கொடுத்திருக்கிறது.

இன்று ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியால் தேக்கத்தால் 75 ஆயிரம் பேர்களுக்கு வேலை கிடையாது. பலர் வாரத்தில் நான்கு நாள்தான் வேலை பார்க்கிறார்கள்.

இந்த நிர்ப்பந்தத்தால் மில்கள் மூடப்படும் அபாயம் ஏற்பட்டிருக்கிறது.

—நவசீனசெய்தி.

# வெகுகாலமாக பிரசுரிக்கப்படாத தாகூரின் இரு கடிதங்கள்

மாஸ்கோ, மே 5—

வெகு காலமாக யாருக்கும் தெரியாது ஒளிந்து கிடந்த, தாகூரின் இரு கடிதங்களை "இன்றைய கிழக்குலகம்" என்ற சோவியத் சஞ்சிகை பிரசுரித்துள்ளது.

இக்கடிதங்கள் 1957-ம் ஆண்டின் இறுதியில் சோவியத் சர்க்கார் பத்திராலயத்தில் கண்டெடுக்கப்பட்டன. இவை சோவியத் நாட்டின் "வோக்ஸ்" நிறுவனத்திற்கு தாகூர் எழுதிய கடிதங்களாகும்.

வோக்ஸ் நிறுவனத்தினர் தமக்குக் கட்டுரை வழங்குமாறு கேட்டு எழுதியதற்கு தாகூர், 1937 ஜூலை 7-ந் தேதி பதில் அனுப்பினார். இதில் அவர் சீக்கிரமே கட்டுரை அனுப்புவதாக வாக்குறுதி அளித்துவிட்டு, மேலும் கூறுவதாவது:

"தங்களுடைய நாட்டின் நிகழ்ச்சிகளை குறிப்பாக கலாச்சார செய்திகளை நான் வெகு கவனமாகப் பின்பற்றி வருகிறேன். இதன் பொருட்டு தங்களுடைய நிறுவனத்தின் வெளியீடுகளைப் படித்து வருகிறேன். சோவியத் யூனியனிடத்தில் எனக்குள்ள ஈடுபாடு மாறவில்லை."

தாகூர் மேலும் கூறுவதாவது: "சூழ்நிலை அனுமதித்தால் மீண்டும் நவ ரஷ்யாவைக் கண்ணுற ஆசைப்படுகிறேன். இதைவிட எனக்கு மகிழ்ச்சிக:ரமானது இருக்க முடியாது. 1930-ல் நான் அங்கு வந்தபோது உண்மையிலேயே ஒரு புதிய உலகைக் கண்டேன்."

### 2-வது கடிதம்

தாகூர் தனது இரண்டாவது கடிதத்தில், தனக்கு அனுப்பப்பட்ட வெளியீடுகளுக்காக "வோக்ஸ்" நிறுவனத்திற்கு நன்றி தெரிவிக்கிறார்.

சோவியத் யூனியனின் பால் மாபெரும் இந்தியக் கவிஞரான தாகூர் கொண்டிருந்த நேச உணர்ச்சிகளை இக்கடிதங்கள் வெளிப்படுத்துகின்றன. சோவியத் யூனியனில் நடைபெற்ற மாபெரும்சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகளை தாகூர் அனுதாபத்துடன் நோக்கி வந்தார் என்பதும் இவற்றிலிருந்து தெரிகிறது.

இந்திய-சோவியத்நட்புறவிற்கு அஸ்திவாரமிட்ட முதல் இந்தியர்களில் தாகூரின் பெயர் சிறப்பிடம் பெறுகிறது என்பதில் ஐயமில்லை.

# மக்கள் சீன கம்யூனிஸ்ட் கட்சி எட்டாவது மகாநாடு

## காரல் மார்க்ஸின் 140வது பிறந்த நாளில் துவக்கம்

பீகிங், மே 6—

நேற்று காரல் மார்க்ஸின் 140-வது பிறந்த தினத்தன்று மக்கள் சீன கம்யூனிஸ்ட் கட்சியின் எட்டாவது மாநாடு தொடங்கியது. ஆயிரத்திற்கு மேற்பட்ட பிரதிநிதிகள் மாநாட்டில் கலந்து கொள்கிறார்கள், 1956 செப்டம்பர் மாதத்தில்தான் ஏழாவது மாநாடு நடைபெற்றது.

இன்று எழுந்துள்ள திருத்தல் வாதத்திற்கு எதிராக தயவு தாட்சண்யமின்றிப் போராட வேண்டுமென்று மாநாட்டில் வலியுறுத்தப்பட்டதாகத் தெரிகிறது. இந்த வேண்டுகோள் நேற்று மக்கள் தினசரி பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

ஜனாதிபதி மாசே-துங் மாநாட்டைத் துவக்கி வைத்த பின்னர், மத்தியக் கமிட்டியின் சார்பில் பொதுச்செயலாளர் லியு-ஷோ-சி அறிக்கை சமர்ப்பித்தார்.

இந்த அறிக்கையில் நிகழ்கால நிலை பற்றி விவரங்கள் தரப்பட்டுள்ளன. சோஷலிஸ்ட் நிர்மாணத்திற்காகக் கட்சி அனுசரித்து வரும் பொதுவான வழி கட்சியின் வருங்காலக் கடமைகள் இவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

மாஸ்கோ மாநாடு பற்றி டெல் சியோபில் அறிக்கை சமர்ப்பித்தார். மாஸ்கோ மாநாட்டு முடிவுகள், சமாதானப் பிரகடனம் இவற்றின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறினார்.

## பர்மாவிலிருந்து 2,70,000 டன் அரிசி

### புது ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று

புதுடில்லி, மே 9—

இந்தியாவுக்கு ஏற்கனவே வாக்களித்திருந்த 5 லட்சம் டன் அரிசிக்குப் பதிலாக இந்த வருடம் 2 லட்சத்து 70 ஆயிரம் டன் அரிசிதான் பர்மா சப்ளை செய்யும். இதற்கான ஒரு புதிய ஒப்பந்தம் இன்று இங்கு கையெழுத்தாயிற்று. இந்தப் பூர்வாங்க ஒப்பந்தத்தை இரு சர்க்கார்களும் ஏற்றுக் கொண்ட பிறகு இதர விபரங்கள் வெளியிடப்படும்.

## பீடி தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம்

பீடி மசோதாவை விவாதிக்க செலக் கமிட்டிக்கூட்டம் 16-5-58 அன்று நடக்கப்போவதாலும், பீடி தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச சம்பளக் கமிட்டியின் கூட்டம் நடக்கப்போவதாலும், இவை பற்றி முடிவுசெய்ய பீடி தொழிற்சங்க பிரதிநிதிகள் கூட்டம் 15-5-58-ல் சென்னை தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் அலுவலகத்தில் நடைபெறும். பீடி தொழிற்சங்கங்கள் தவறாது பிரதிநிதிகளை அனுப்பிவைக்கவும்.

செயலாளர்,
தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ்.

# தோல் பதனிடும் தொழிலில் நெருக்கடி சர்க்கார் நடவடிக்கை உடன் தேவை

## வடஆற்காடு ஜில்லா தோல் பதனிடும் தொழிலாளர் சங்கப் பொதுக்காரியதரிசி அறிக்கை

வாணியம்பாடி, மே 8—

வடாற்காடு ஜில்லா தோல் பதனிடும் தொழிலாளர் சங்கப் பொதுக்காரியதரிசி தோழர் எஸ். டி. குசைநாதன் பத்திரிகைகளுக்கு விடுத்துள்ள ஒரு அறிக்கையில் பின் வருமாறு கூறுகிறார்.

தோல் பதனிடும் தொழில் நம் நாட்டின் பிரதானமான தொழில்களில் ஒன்று ஆனால் சென்னை மாகாணத்தில் ஏகாதிபத்தியப் பிடிப்பின் காரணமாகவும், இஷ்டம் போல் தோல் விலையைக் குறைப்பது, உயர்த்துவது என்ற கொள்கையைக் கடைப் பிடிப்பதின் காரணமாகவும், தோல் பதனிடும் தொழில் க்ஷீணதசை அடைந்து வருகிறது.

இந்தத் தொழிலை அக்கறையுடன் கவனிக்கவில்லை நமது இந்திய சர்க்கார்.

இந்தியாவில் உற்பத்தியாகும் தோல் விலையை நிர்ணயிக்க இந்திய முதலாளிகளுக்கு உரிமை கிடையாது. இந்த உரிமை நமது சர்க்காரால் பிரிட்டனிடம் விட்டு வைக்கப்பட்டுள்ளது.

பிரிட்டிஷ் முதலாளிகளுக்கு ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியின் காரணமாக இன்று வாணியம்பாடியில் தோல் ஷாப்புகள் மூடப்பட்டு வருகின்றன. 6, 7 தோல் ஷாப்புகளில் தொழிலாளருக்கு மாதம் 10 நாள் வேலை கிடைப்பதுகூட அரிது.

முதலாளிகள் தங்கள் லாபத்தை பிரதானமாக எண்ணி, தொழிலாளர்கள் போராடிப் பெற்ற சில சிறு சட்டங்களைக் கூட முதலாளிகள் குப்பைத் தொட்டியில் எறிகின்றனர்.

சம்பள ஆட்களை நீக்கி தினசரிக் கூலி யாட்களாக மாற்றி விட்டார்கள். அதிக வேலையும், குறைந்த கூலியும் கொடுத்துத் தொழிலாளிகளைப் பழிவாங்குகின்றார்கள்.

இன்று வாணியம்பாடியில் சுமார் 2000க்கு மேற்பட்ட தொழிலாளிகளுக்கு வேலையில்லை.

ஆகவே வேலையில்லாத் திண்டாட்டத்தை அகற்றவும், தொழிலைப் பாதுகாக்கவும் கீழ்க்காணும் நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்க வேண்டும்.

1. தோல் மார்க்கெட்டை இந்தியாவில் வைக்க வேண்டும்;
2. கொள்ளை லாபத்தைக் கருதி, எடையை அதிகரிப்பதற்காக உப்பு, சர்க்கரை, வெல்லம் உபயோகிப்பதைத் தடை செய்ய வேண்டும்;
3. உண்மையாகவே நஷ்டமடைந்த வியாபாரிகளுக்குக் கடன் கொடுத்துத் தொழிலை நடத்த சர்க்கார் ஊக்கமளிக்க வேண்டும்;
4. மூடிய தோல் ஷாப்புகள் மீண்டும் திறக்கப்பட்டு, வேலையில்லாத தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை கொடுக்க வேண்டும்;
5. தோல் தொழில் மசோதாவை அமுல் நடத்த வேண்டும்;
6. பேக்டரி சட்டத்தை அமுல் நடத்த வேண்டும்.

## ஹிரோஷிமாவில் உயிர் நீத்த மாணவருக்கு நினைவுச் சின்னம்

பீகிங், மே 6—

அமெரிக்க அணு குண்டு வீச்சுக்குப் பலியான தமது சக மாணவர்களுக்கு ஹிரோஷிமா மாணவர்கள் ஒரு நினைவுச் சின்னம் ஏற்படுத்தியுள்ளனர். ஜப்பானில் குழந்தைகள் தினத்தை ஒட்டி இச் சின்னத்தின் திறப்பு விழா நடைபெற்றது. 'நித்திய நிரந்தர சமாதானம்' என்று அந்த நினைவுச் சின்னத்தின் மீது பொறிக்கப் பெற்றுள்ளது. இதைக் கட்டி முடிப்பதற்காக ஜப்பானிய மாணவரும் பிற நாட்டு மாணவரும் 54 லட்சம் யென் நிதி திரட்டியுள்ளனர்.

1944-ல் அணுகுண்டு போடப்பட்டபோது ஹிரோஷிமா நகரின் ஜனத்தொகையான 4 லட்சத்தில் இரண்டு லட்சத்து 40 ஆயிரம் பேர் உடனே மாண்டனர்: 1½ லட்சம் பேர் காயமுற்றனர். அணுகுண்டு வீச்சால் 1 லட்சம் பேர் நோயுற்று வருகின்றனர்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

செயல்பட வேண்டும் என்றும், ஒரிஸாவில் அதிகாரவர்க்க ஜனாதிபதி ஆட்சியோ, வாக்குறுதிகளுக்குத் துரோகம் செய்வோர் ஆதிக்கமோ நீடிக்க விடக்கூடாது.

ஒவ்வொரு படியிலும் மக்களுக்கு துரோகம் விளைத்துள்ள காங்கிரஸ் சர்க்கார் ராஜினாமாச் செய்ததை மக்கள் வரவேற்பது இயல்பு என்று அறிக்கை குறிப்பிடுகிறது. மெஹதாப் சர்க்கார் நீடிக்க முடியாத காரணத்தால் ஜனாதிபதி ஆட்சியைத் திணிக்க முயல்கிறது காங்கிரஸ் என்று தீர்மானம் குறிப்பிடுகிறது.

மாற்று மந்திரிசபை அமைக்க அரசியல் சட்டப் பிரகாரம் கவர்னர் முன்வருவதே பொருத்தமுடையது என்றும் கூறுகிறது.

### கட்சிகளின் நிலை

138 பேர் உள்ள ஒரிஸா சட்டசபையில் இரண்டு ஸ்தானங்கள் காலி. காங்கிரஸிற்கு சபாநாயகர் தவிர, 65. கணதந்திர பரிஷத் 45, பி. சோ. 11, கம்யூனிஸ்ட் 8, ஜார்கண்ட் கட்சி 5, சுயேச்சை 1, சோஷலிஸ்ட் 1 அண்மையில் விலக்கப்பட்ட உதவியமைச்சர் அனுப்சிங் தியோ ஒரு உறுப்பினராவார்.

# தமிழர்களுக்கு வாழ்வு தருவது கம்யூனிஸ்ட் சர்க்கார்தான்

## காந்தலூர் மக்கள் ஆதரவு ரோஸம்மாளுக்கே

தேவிகுளம், மே 10—

தேவிகுளம் தொகுதி உபதேர்தல் சூடுபிடித்து வெகு மும்முரமாக நடக்கிறது. கம்யூனிஸ்ட் அபேட்சகர் ரோசம்மா புன்னூஸ் மலை உச்சிகளிலேயிருக்கும் ஒவ்வொரு தோட்டங்களுக்கும் சென்று, வீடு வீடாக ஆண்பெண் தொழிலாளர்களை வரையும் கண்டு பேசி வருகிறார். பல நூறு வருடங்களுக்கு முன்னேயே, தோட்டங்களே ஏற்படுத்தப்படாத காலத்திலேயே, காந்தலூர் பகுதியில் 5 ஊர்களில் தமிழ் மக்கள் வசித்து வருகிறார்கள். அவர்களில் பல தொண்டு கிழவர்களைப் பார்த்து, நீங்கள் எந்த ஜில்லாவைச் சேர்ந்தவர்கள் என்று கேட்டால், அது எந்த ஜில்லாவோ தெரியாது என்கிறார்கள். அவ்வளவு பூர்வீகமானவர்கள். ஆனால் நன்றாகத் தமிழ் பேசுகிறார்கள் பழக்க வழக்கங்களெல்லாம் தமிழர் முறையில்தான் இருக்கிறது. கொள்வினை கொடுப்பினை எல்லாம் இந்த 5 ஊர்களுக்குள்தான். இவர்களுக்கு தொழில் விவசாயம். கோதுமை, வெள்ளப்பூடு, வாழை முதலியன பயிரிட்டு ஜீவிக்கிறார்கள். எல்லாரும் ஏழை விவசாயிகள். இவர்களில் பெரும்பாலாருக்கு வீட்டு வசதி இல்லை. பள்ளத்தாக்குகளில் புரண்டோடி வரும் வெள்ளத்தைத் தாண்டி ஒரு மலை மக்கள் மறு மலை கிராமத்துக்குச் செல்ல பாலம் கிடையாது பள்ளிக்கூடமோ, நல்ல ஆஸ்பத்திரியோ ரோடு வசதியோ கிடையாது. இவையெல்லாம் வேண்டுமென்றும், கடன் வசதிகள் தரவேண்டுமென்றும், உழுவதற்கு சொந்தமாக நிலம் வேண்டுமென்றும் இந்த மக்கள், காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் எத்தனையோ தடவை வேண்டிப் பார்த்தார்கள். ஒன்றும் பலிக்கவில்லை

ஆனால் கம்யூனிஸ்டு ஆட்சி வந்தவுடன், தமிழ் மக்களுக்கு அதிர்ஷ்டம் பிறந்தது. கேரளத்தில் வாழும் சிறுபான்மையினர் விஷயத்தில், கம்யூனிஸ்ட் சர்க்கார் விசேஷ அக்கறை எடுத்துக் கொண்டது.

இந்த ஊர்களின் பஞ்சாயத் போர்டு தலைவர்களுக்கு மந்திரி என்று பெயர். அவர்களைக் கண்டு பேசியதில், 'கம்யூனிஸ்டு வந்த பிற்பாடுதான் எங்கள் மனுவை அங்கீகரித்து, பாலம் கட்ட 2000 ரூபாய் அனுமதித்திருக்கிறார்கள். 25,000 ரூபாய்க்கு பள்ளிக்கூடம் கட்டவும் பணம் சாங்ஷன் ஆகிவிட்டது'' என்று மிக்க மகிழ்ச்சியோடு என்னிடம் தெரிவித்தார்.

'கம்யூனிஸ்ட் ஆட்சிவந்த இந்த ஒரு வருட காலத்தில், தமிழர்களுக்கு என்னென்ன அநீதிகள் இழைக்கப்பட்டிருக்கிறது' என்று கேட்டேன். அதற்குஅவர் இப்பொழுதுதான் போலீஸ் பயமற்ற நிம்மதியான வாழ்க்கை கிடைத்திருக்கிறது. முன்பெல்லாம் மாடுமேய புல் எடுத்துவர மலைக்குச் சென்றால், காட்டிலாகா அதிகாரிகள் விரட்டியடிப்பார்கள், வழக்குப் போட்டு கஷ்டப்படுத்துவார்கள். ஏடா, பாண்டிக்காரா என்று கேவலமாகப் பேசுவார்கள். இப்போது கம்யூனிஸ்ட் ஆட்சி வந்த பிற்பாடுபுல் அறுத்துவருகிறோம், யாரும் தடுப்பதில்லை. எங்கள் மாடுகள் மேய்கின்றன. யாரும் விரட்டுவதில்லை. போலீஸ் பயமே இல்லை என்றார்கள்.

ரோஸம்மாவுடன் தேர்தல் பிரச்சாரத்துக்காக, இந்த காந்தலூருக்கு நானும் சென்றேன். அங்கு ஒரே உற்சாகம் பொங்குகிறது. ஒவ்வொரு வீட்டிலும் ரோஸம்மாவை தமிழ்ப் பெண்கள் கூட்டிச் சென்று உபசரித்தார்கள். உபசரித்துக் கொண்டே, ''நீங்கள்தான் எங்களுக்கு பகவதி. எங்களை இது வரை யாரும் கவனிக்கவில்லை உங்கள் மேலேதான் பூரண நம்பிக்கை. இங்கு தேர்தலுக்கு தேர்தல் ஒவ்வொருவரும் வந்து அது செய்வேன், இது செய்வேன் என்று சொல்லிவிட்டு, ஓட்டு வாங்கிப்போன பிறகு ஒன்றுமே செய்வதில்லை. நீங்கள் எங்களுக்கு பிரசவ ஆஸ்பத்திரி கட்டித்தர வேண்டும். பிழைக்க வழி செய்ய வேண்டும்'', என்று சொன்னார்கள்.

அதற்கு ரோஸம்மா, நாங்கள் வந்து ஒரு வருடம் தான் ஆகிறது. அதற்குள் உங்களுக்கு பள்ளிக்கூடம், பாலம் வசதிகளுக்கு ஏற்பாடுசெய்துவிட்டோம். 7½லட்சம் தரிசு நிலத்தை ஏழை விவசாயிகளுக்குப் பங்கிட சட்டமியற்றி விட்டோம். உங்களுக்கு ஆளுக்கு 5, 6 ஏக்கர் கிடைக்கும். சர்வே முடிந்தவுடன், இன்னும் 4, 5 மாதத்தில் உங்கள் பேருக்கே பத்திரம் பதியப்படும். விவசாயிகளுக்கு கடனும் கிடைக்க ஏற்பாடு செய்கிறோம் மற்ற சகல வசதிகளும் செய்யமுடியும். தமிழிலேயே கோர்ட்டுகளில் மனுச் செய்யலாம் என்றும், ஹரிஜனங்களுக்கு சர்க்கார் செலவில்இலவசமாக வக்கீல் உதவி அளிப்பது என்றும் நமதுசர்க்கார் தீர்மானித்துள்ளது. பெண்களுக்காக கட்டாயம் நல்ல பிரசவ ஆஸ்பத்திரி கட்ட ஏற்பாடு செய்கிறோம். இவற்றுக்கெல்லாம் சர்க்கார் உறுதியாக இருக்க வேண்டும். நான் ஜெயித்தால் இன்னும் உறுதியாகும். உங்களுக்கு நல்ல காரியங்களைச் செய்துவரும் சர்க்காரைக் கவிழ்க்க வேண்டுமென்று பணக்காரர்கள் முயற்சிக்கிறார்கள். நீங்கள் உஷாராக இருந்து கதிர் அரிவாள் சின்னத்தில் ஓட்டுப் போட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். கொட்டும் மழையிலும் மலை மீதுள்ள பாறைகளின் மேல் குடியிருக்கும் மக்களையும் கண்டு பேசி, ஆதரவு பெற்று வந்தார் ரோஸம்மாள். இப்பகுதி மக்களிடம் பொங்கி வரும் உற்சாகத்தைச் சொல்லி முடியாது. (ந. கி.)

# காங்கிரஸை முறியடிப்பீர்!

## தேவிகுளம் உபதேர்தல் பற்றி 'பிளிட்ஸ்' உபதலையங்கம்

பம்பாய், மே 7—

தேவிகுளம் காங்கிரசை நிராகரிக்க வேண்டும் என்ற மகுடத்தில் பம்பாயிலிருந்து வெளிவரும் பிளிட்ஸ் பத்திரிகை ஒரு தலையங்கம் தீட்டியுள்ளது. அதில் குறிப்பிடுவதாவது :—

கேரளத்தில் அடுத்த வெள்ளிக்கிழமை நடைபெறவிருக்கும் தேவிகுளம் உபதேர்தலில் மையப்படுத்தப் பட்டுள்ள அளவு முக்கியத்துவம் சாமான்யமாக உப தேர்தல்களில் காணப்படுவது அரிது. அங்கு இப்போது உள்ள சர்க்கார் நிலைபெற்றிருக்கும் பிரச்சினை வாஸ்தவத்தில் இதைச் சார்ந்து நிற்பதால் வாக்காளர்களுக்கு இதில் மிக மிக விசேஷப் பொறுப்பு இருக்கிறது.

தேவிகுளம் தேர்தல் இயக்கத்தில் கலந்துகொள்ள வேண்டாம் என்று அமைச்சர்களுக்கு கேரள கம்யூனிஸ்ட் கட்சி தடை போட்டுள்ளது. ஆரோக்கியகரமான இந்த ஜனநாயக நல் வழக்கத்திற்கு விரோதமாக இரு மத்திய சர்க்கார் மந்திரிகள் அங்குசென்று காங்கிரஸ் அபேட்சகருக்குச் சப்பைக்கட்டுக் கட்டி பலமளிக்க முயல்கிறார்கள். இந்தப் போக்கு மிகவும் ஆட்சேபகரமானது.

### காங்கிரசுக்கு எதிராக வாக்களியுங்கள்

மத்திய சர்க்காரின் அதிகாரமும் செல்வாக்கும் காங்கிரஸ் கட்சிக்காக சுரண்டப்பட்டுப் பயன்படுத்தப்படும். எனவே நியாயத்திற்காக மட்டுமே மற்ற கட்சியைத்தான் வாக்காளர்கள் ஆதரிக்க வேண்டும். இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் தமது நல்ல பணியைத் தொடர்ந்து நடத்த அனுமதிக்கப்படவேண்டியது அவசியம். இதைவிட காங்கிரசுக்கு நேர்மை பற்றி பாடம் கற்பிக்க வேண்டியது அவசியம். எனவே வாக்காளர்கள் திரளாகச் சென்று காங்கிரசுக்கு எதிராக வாக்களியுங்கள்.

# நம்பிக்கை இழந்த காங்கிரஸ்காரர்கள் குண்டாத்தனத்தில் இறங்குகின்றனர்!

## எங்கும் 'கிறிஸ்டோபர்' ரௌடிகள் அட்டகாசம் புரிகின்றனர்

### கீழ்த்தரமான பொய்ப் பிரச்சாரம்

வண்டிப்பெரியார், மே 8—

தேவிகுளம் பீர்மேட்டில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் தோழியர் ரோசம்மா புன்னூசுக்கு நாளுக்கு நாள் ஆதரவு பெருகி வருகிறது. இதனைக் கண்டு காங்கிரஸ்காரர்கள் ஆத்திரமடைந்து ஆங்காங்கு கிறிஸ்டோபர் குண்டர்களை ஏவிவிட்டு காலித்தனம் செய்ய முனைந்துள்ளனர்.

உதாரணமாக காங்கிரஸ் எம். எல். ஏ., பி.சி. செரியனுக்கு சொந்தமான புள்ளிகானம் தோட்டத்தில் மே 7-ம் தேதி கம்யூனிஸ்ட் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் நடத்த தோட்டத் தொழிலாளர்கள் உற்சாகமாக ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர்.

இதைப் பார்த்து அங்கலாய்ப்புக் கொண்ட தோட்ட சூப்பிரண்ட் கூட்டம் நடக்காதபடி தடுக்க மாலை 5 மணிக்கு மேல் 'ஓவர்டைம் வேலை' வைத்திருப்பதாகக்கூறி வேலைக்குக் கூப்பிட்டார். அதற்கும் தொழிலாளர்கள் சளைக்காது வேலை முடிந்ததும் 7 மணிக்கு மேல் கூட்டம் நடத்துவது என்று முடிவு செய்தனர்.

அதன்படி 7 மணிக்கு வேலை முடிந்ததும் வர்க்க போதம் கொண்ட தொழிலாளர்கள் செங்கொடிகளை ஏந்தி ஊர்வலமாக வந்தனர். பின்னர் கூட்டம் விக்கிரமன் தலைமையில் ஆரம்பமாயிற்று. திண்டுக்கல் தோழர் எஸ். ஏ. தங்கராஜன் பேச ஆரம்பித்தார். அப்போது தோட்ட சூப்பிரண்டின் தூண்டுதலால் 12 கிறிஸ்டோப குண்டர்கள் கூட்டத்திற்குள் நுழைந்து ''வை வை செங்கொடியை தாழ, வா, வா என்னோடுகூட'' என்று கோஷமிட்டு கலாட்டா செய்தனர். இந்தச்சமயம் நூற்றுக்கணக்கான செங்கொடிகளை ஏந்தி மேலும் ஏராளமான தொழிலாளர்கள் ஆண்களும், பெண்களும் ஊர்வலமாக வந்து கொண்டிருப்பதைப் பார்க்கவே, குண்டர்கள் ஓடிவிட்டனர். உடனே கூட்டத்தினர் ''காளைகள் மிரண்டு ஓடட்டே; அராபிக் கடலில் சாகட்டே'' என்று கோஷமிட்டனர். அதன்பின் கூட்டத்திற்கு வராதவர்களும் வந்து கூட்டத்தை வெற்றிகரமாக நடத்திக் கொடுத்தனர். இதனைப் பார்த்து சூப்பிரண்டின் உடல் அவமானத்தால் ஒரு சாணுகம் குன்றிபோய் விட்டது.

### மற்றொரு இடத்தில் கை வரிசை

புள்ளிகானம்தோட்டத்தில்நடந்ததுபோலவே எளபெரியா தோட்டத்திலும் கிறிஸ்டோப குண்டர்கள்தங்கள்கைவரிசையைக்காட்டியுள்ளனர். மே 4-ம் தேதி அந்தத் தோட்டத்தில் கம்யூனிஸ்ட் தேர்தல் பிரச்சார பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு விட்டு வி. மதனகோபால், எஸ். ஏ. தங்கராஜன், சாலமன் எம். பி. ஆகியோர் திரும்பி வந்துகொண்டிருந்தனர். அப்போது கோஷ கானம் தோட்டத்திற்குப் பக்கம் உள்ள பாதையை அடைத்துக் கொண்டு சுமார் 60 கிறிஸ்டோபகுண்டர்கள் நம் தோழர்களின் கார் செல்ல வழிவிட மறுத்துவிட்டனர். அதோடு ஆத்திரமூட்டும்படியான கோஷங்களையும் எழுப்பினர். தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கும் வேளையில் ஆத்திரமூட்டலுக்கு இரையாகிவிடக்கூடாது என்று நமது தோழர்கள் ரொம்பவும் பொறுமையாகஇருந்தனர். கிறிஸ்டோப குண்டர்கள் தங்கள்ஜம்பம் சாயவில்லை எனத் தெரிந்ததும் வாலை சுருட்டிக்கொண்டு போய் விட்டனர்.

இந்தப் பகுதியில் காங்கிரஸ்காரர்களும், கிறிஸ்டோபர்களும் செய்யும் பிரச்சாரம் மிகவும் கீழ்த்தரமாக இருக்கிறது. உதாரணத்துக்கு சில 'சாம்பிள்களை'த் தருகிறோம்.

கம்யூனிஸ்ட் சர்க்கார் நயா பைசா என்னும் நாசகார காசைக் கொண்டுவந்து கணக்குத் தெரியாத மக்களை ஏமாற்றி காசு பறிக்கிறது என்பது ஒரு ரகப் பிரச்சாரம்!

இன்னொன்று இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் உணவில்விஷம்கலந்து நேருவைக் கொல்லப் பார்த்தாராம். இது தவறியதால் கேரள மக்கள் விஷம் தின்று இறந்துவிட்டார்களாம்!

இப்படி, உண்மையே தன் வாழ்வின் தாரக மந்திரம் என்று மதித்திருந்த மகாத்மா காந்தியடிகளின் சீடர்களான காங்கிரஸ்காரர்கள் சொல்லமுடியாத பொய்யும் புனைசுருட்டுகளையும் அள்ளிவீசி வருகிறார்கள். இது அவர்களுடைய பலஹீனத்தையே காட்டுகிறது.

# நிருபர் வீட்டுக் கல்யாணத்திற்கு செய்தி இலாகா கார் உபயோகம்

## பிரதி ரூ. 2க்கு விசேஷ மலர்கள் வாங்கினர்

### ராஜஸ்தான் செய்தி இலாகா ஊழல்கள்

ஜெய்ப்பூர், மே 7—

ராஜஸ்தான் சர்க்கார் செய்தி இலாகாவைச் சேர்ந்த கார் இதர தளவாடங்கள் ஒரு பத்திரிகை நிருபர் வீட்டுக் கல்யாணத்திற்குப் பயன்படுத்தப்பட்டன. ராஜஸ்தான் கால்வாய்த் திட்டம் பற்றி விளம்பரம் செய்ய 30 ஆயிரம் ரூபாய் செலவழிக்கப்பட்டது.

இதுபோன்ற ஊழல் பற்றிய தகவல்கள் ராஜஸ்தான் சட்ட சபையில் அம்பலமாயிற்று. இந்த இலாகா பற்றி விசேஷக் கணக்குப் பரிசோதனை நடத்த சர்க்கார் உத்தரவிட்டுள்ளது.

இந்த ஊழல்களில் இன்னும் சில 'மாதிரி'கள் பின்வருமாறு:

ராஜஸ்தான் கால்வாய்த் திட்டம் பற்றி விசேஷ அனுபந்தங்கள் கொண்டுவருவதற்காக பிரபல பத்திரிகைகளுக்குத் தலைக்கு ரூ. 5000 மான்யம் அளிக்கப்பட்டது. வாரப் பத்திரிகைகளுக்கும் நன்கொடை வழங்கப்பட்டது. வெளிநாட்டிலிருந்து வந்த நிருபர்கள் உல்லாசப் பிரயாணம் ஏற்பாடு செய்யப்பட்டு ஊதாரியாகச் செலவு நடந்தது. இதற்குச் சரிவரக் கணக்குக் காட்டப்படவில்லை.

விளம்பரங்கள் கொடுக்கும் விஷயம் பற்றியும் விசாரணை நடத்த உத்தரவிடப்பட்டுள்ளது. பம்பாயிலுள்ள ஒரு வாரப் பத்திரிகைக்கு 15 ஆயிரம் ரூபாய் பெருமதியுள்ள விளம்பரம் கொடுக்கப்பட்டது, இப்பத்திரிகை ராஜ்ய சர்க்கார் அங்கீகாரம் பெற்ற ஜாபிதாவில் இல்லை.

ஒரு சில நூறு பிரதிகளே அச்சடிக்கும் ஸ்தல வாரப் பத்திரிகைகள் சிலவற்றுக்கு ரூ. 12 ஆயிரம் பெறுமான விளம்பரங்கள் கொடுக்கப் பெற்றுள்ளன. உதயபுரியிலிருந்து வெளிவரும் பத்திரிகையின் விசேஷ 'இதழ்' இரண்டாயிரம் பிரதிகள், பிரதி 2 ரூபாய்க்கு வாங்கப் பெற்றன. இத்தியாதி ஊழல்கள். —ஐ. பி. ஏ.

### திருத்தம்

5-5-58 'ஜனசக்தி'யில் தேவிகுளம் தேர்தல் நிதியில் மதமடக்கிக்கட்சிககிளை என்றிருப்பதை மரமடக்கிக் கட்சிக் கிளை என்று திருத்திப் படிக்கவும்.

# வரதட்சிணையைத் தடை செய்க

## மக்கள் சபைக்கு 70 மாதர்கள் தூதுகோஷ்டி விஜயம்

### 15,000 கையெழுத்துகொண்ட மகஜர்

புதுடில்லி, மே 8—

70 மாதர்கள் அடங்கிய ஒரு தூதுகோஷ்டி திருபதி ஹஜ்ரா பீகம் தலைமையில் மே. 5-ல மக்கள் சபைக்குச் சென்று, வரதட்சிணையைத் தடை செய்யும் சட்டம் நிறைவேற்றக் கோரி ஒரு மகஜர் சமர்ப்பித்தனர். மகிளா மங்கள் பரிஷத் (தாரியா கஞ்ஜ்), மகிளா சமிதி (மோடி நகர்), பெய்ஸ் பஜார் மாதர் சங்கம், மகிளா சமிதி (ஷாதரா), ஆந்திரா வனிதா மண்டல், மகிளா சமிதி (பஹார் கஞ்ஜ்) மகிளா சமிதி (சப்ஜி மாந்தி)—ஆகிய மாதர் ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் இந்த தூதுகோஷ்டியில் கலந்து கொண்டனர்.

இந்திய மாதர் தேசிய சம்மேளனத்தின் சார்பில் இந்தத் தூதுகோஷ்டி ஏற்பாடு செய்யப்பட்டது.

பிறகு இத் தூதுகோஷ்டியினர் யூனியன் சட்ட மந்திரி அசோக் சென்னை சந்தித்து, வரதட்சிணையைத் தடை செய்து சட்டம் இயற்றக் கோரி 15,000 பெண்கள் கையெழுத்திட்ட மகஜரை சமர்ப்பித்தனர். வங்காளம், டில்லி, உத்திரப்பிரதேசம் இன்னும் இந்தியாவின் இதர பகுதிப் பெண்களிடம் இந்தக் கையெழுத்துக்கள் சேகரிக்கப்பட்டன.

இத்தகைய மசோதா அவசியம் தானென்று தான் ஒப்புக்கொள்வதாயும், ஆனால் சட்டம்போடுவதற்கு முன் நாடு தழுவிய தீவிர இயக்கம் நடத்தப்பட வேண்டுமென்றும் அவர் குறிப்பிட்டார்.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM.